REGD. No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812818 4 பக்கம் விலை 35 காசு




# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்




மலர் 4 சென்னை 18-8-1980 திங்கள் (★) ❋ ● ❋ (★) வெளியூர் 19-8-1980 செவ்வாய் இதழ் 280



மதுராந்தகத்தில் நடைபெற்ற விழாவில் ஏழைத்தாய்மார்களுக்கு புரட்சித் தலைவர் மணிப்பட்டா வழங்கினர்.

## இந்திரா காங்கிரஸ் செயற்குழு:

# மூப்பனர் கோஷ்டி புறக்கணிப்பு

### போலீஸ் காவலுடன் கூட்டம்

சென்னை, ஆக. 18-இந்திரா காங்கிரஸ் செயற்குழுக் கூட்டத்திற்கு மூப்பனர், கோஷ்டியினர் எவரும் வராமல் புறக்கணித்தனர். போலீஸ் பாதுகாப்புடன் கூட்டம் நடந்தது.

இ. காங்கிரஸ் செயற்குழுக் கூட்டம் இன்று காலை 11 மணிக்கு சென்னை அசோகா ஓட்டலில் துவங்கியது.

எம் பீ சுப்ரமணியம் தலைமை வகித்தார்.

இந்தச் செயற்குழுக் கூட்டத்திற்கு மத்திய நிதி அமைச்சர் ஆர். வெங்கட்ராமன், மத்திய விவசாய துணை அமைச்சர் ஆர். வி. சுவாமிநாதன் மற்றும் ஏ, கே. சண்முகசுந்தரம், இளையபெருமாள், ஏ பி சி வீரபாகு, எஸ் ஆர் பாலசுப்ரமணியம் சித்தன் ஆர் எஸ் பாண்டியன் அப்துல்காதர் பழனியாண்டி கிருஷ்ணசாமி ஆகியோர் கலந்து கொண்டனர்.

### தோல்விக்கு தி. மு. க.வே காரணம்

கூட்டத்தில் கலந்து கொண்ட பெரும்பாலோர் தேர்தலில் இ காங்கிரஸ் தோல்வியடைந்ததற்கு தி மு க. வுடன் கூட்டுசேர்ந்ததுதான் காரணம் என்று பேசியுள்ளனர்.

இ காங்கிரஸ் தலைவர்கள் பலரும் இதேகருத்தை அழுத்தம் திருத்தமாகக் கூறியுள்ளனர்.

### மூப்பனர் குழு புறக்கணிப்பு

இன்று நடந்த செயற்குழுக் கூட்டத்தில் மூப்பனர், சிவாஜிகணேசன், திண்டிவனம் ராமமூர்த்தி, ஆகியோர் கலந்துகொள்ளவில்லை.

தமிழகம் முழுவதும் உள்ள மாவட்டக் கமிட்டியின் இந்திரா காங்கிரஸ் தலைவர்கள் எவரும் இந்தக் கூட்டத்தில் கலந்து கொள்ளவில்லை.

தமிழ்நாடு இ. காங்கிரஸ் செயற்குழுக் கூட்டத்தில் மவாட்டக் கமிட்டித் தலைவர்கள் எவரும் கலந்து கொள்ளாமல் இருப்பது இதுவே முதல முறை என்று கூறப்படுகிறது.

### கூட்டத்திற்கு அழைப்பே இல்லையா?

முக்கியமானவர்கள் பலர் கலந்து கொள்ளாததற்கு மாவட்டக் கமிட்டித் தலைவர்கள் எவரும் வராததற்குக் காரணம் என்னஎன்று வினவியபோது, ஒருதரப்பினர் அழைப்பே அனுப்படவில்லை என்று கூறினர் அதனால்தான் பலர்கலந்து கொள்ளவில்லை என்று தெரிவித்தனர்.

மூப்பனர் கோஷ்டியினருக்கு வேண்டுமென்றே அழைப்பு அனுப்பாமல் ஒதுக்கிவைக்கப்பட்டதா- அல்லது அவர்கள் இந்த செயற்

(4-ம் பக்கம் பார்க்க)



### குஜராத்தில் ராணுவம் சுட்டது

அகமதாபாத், ஆக. 18 குஜராத் மாநிலத்திலுள்ள வாடிகம் நகரில் நேற்று நள்ளிரவில் ராணுவம் துப்பாக்கிச்சூடு நடத்தியது.

நேற்று இரவில் ஒரு வன்முறை கும்பல் போலீசார் மீது கல்வீசி கலவரம் செய்தனர். அதையொட்டி ராணுவத்தினர் அந்த கும்பல் மீது துப்பாக்கிச் சூடு நடத்தினர்.

## சட்டம் - ஒழுங்கு அங்கும் இங்கும்

பேரன்புடையீர்,

தமிழ்நாட்டில் சட்டம் அமைதி கெட்டுவிட்டதென்று அங்கலாய்த்துக்கொள்வது அரசியல்வாதிகளுக்கு வாடிக்கையாகிவிட்டது.

பொழுதை கழிக்க முடியாமல் தவிக்கும் சிலருடைய பொறுப்பற்ற பேச்சு என்பதை நீங்கள் தெரிந்து வைத்துள்ளீர்கள். இருந்தாலும் நாட்டு நடப்பைத் தெரிந்துகொள்ள சில சேதிகளை உங்கள் காதில் போட்டு வைக்கிறேன்.

''பிள்ளை பிடிக்கிறார்கள்'' என்ற பீதியை சென்னையில் இரண்டு வாரங்களுக்கு முன்னால் கிளப்பிவிட்டார்கள். ஆனால் நமது காவல்துறையினரின் திறமையால் பொய் வதந்திகள் தகர்த்து எறியப்பட்டு விட்டது.




துர்ப்பாக்கியவசமாகத் திருப்பத்தூரில் (வ.ஆ) நடந்த சம்பவத்தைப் பயன்படுத்தி ஆட்சியையே கலைப்போம் என்று சில உதிரிகள் உதிர்த்த நச்சு வார்த்தைகளை வைத்தக்கொண்டு சட்டப்பேரவையில் அமளியே நடந்திருக்கிறது. திமுக தலைவர் தன் முழுத் திறமையையும் காட்டியிருப்பதாகக் கேள்வி.

**சபலம் யாரை விட்டது? மீண்டும் ஒரு முறை சட்டசபையைக்கலைக்க மாட்டார்களா? செய்துவைத்தக் கிரீடத்தை சூட்டிக்கொள்ள முடியாதாஎன்ற ஆசைதான்!**

குதிரைப் பந்தய மைதானத்துக்குள் நுழையும் அனைவருமே சென்ற வாரம் விட்ட பணத்தை இந்த வாரம் பெற்றுவிடலாம் என்று எண்ணித்தான் போகிறார்கள்! ஆனால் சென்ற வாரம் போனதோடு சேர்த்து இந்த வாரம் இழப்பார்கள். மீண்டும் ஞாயிறு வராதா என்று காத்திருப்பார்கள். வரும். இழப்பார்கள்! இது தொடர் கதை! அரசியலிலும் இப்படி நப்பாசை கொண்டோர் இருக்கத்தான் செய்கிறார்கள்!

தைரியமாக நக்சலைட்டுகளைப் பிடித்த காவல் துறையினரை பாராட்டியிருக்க வேண்டும். அதற்குப் பெரிய ஆற்றல் தேவையில்லை, மனிதத் தன்மை தேவை!

என்ன செய்வது பூக்கும் எல்லா பூக்களும் மணம் உள்ளவைகளல்ல!

முல்லைக்கிருக்கும் மணம் காக்கட்டானுக்கு உண்டா?

கரும்புத் தோட்டத்துக் கரும்பு இனிக்கும்! வெற்றிலைத் தோட்டத்துக் கரும்பு கசக்கும்!

மனிதர்களுள் சிலர்தான் மனித இதயத்தோடு வாழ்கின்றனர்!

''ஈத் பண்டிகையில் பயங்கர கலவரம், 24 பேர் கொல்லப்பட்டுள்ளனர்,

மூன்று காவலர்கள் துப்பாக்கி குண்டுபட்டு இறந்திருக்கிறார்கள்!

ஒரு காவலர் என்ன ஆனார் என்றே தெரியவில்லை;

ஒரு போலீஸ் சப்-இன்ஸ்பெக்டரும், ஒரு கமேண்டரும், ஒரு தலைமைக் காவலரும் குண்டு காயம் அடைந்துள்ளனர்!

காவலர்களையும், வெளிப்புற காவல் நிலையத்தையும் தாக்கிய கூட்டத்தினரை நோக்கிச் சுட்டதில் பனிரெண்டு பேர் கொல்லப்பட்டனர்!

கொள்ளையடித்தல், கத்தியால் குத்துவதுபோன்ற பல சம்பவங்கள் நடந்துள்ளன.

சில கடைகள் சூறையாடப்பட்டுள்ளது.

கூட்டத்திலிருந்து கற்கள் மட்டுமல்ல துப்பாக்கி குண்டுகளும் வந்தன!''

இவ்வளவும் நடந்திருப்பது உத்திரபிரதேசத்தில் இந்தத் தகவல்களை வெளியிட்டவர் இ. காங்கிரஸ் கட்சி முதல்வர் விஸ்வநாத் பிரதாப்சிங்!

ஈத் பண்டிகை கொண்டாடிய முஸ்லீம்களுக்குக் கிடைத்துள்ள பரிசு!



கிடைத்துள்ள பரிசு!

சட்டம் அமைதி பற்றி இ.காங்கிரஸ் தலைவரோ - வலிய சென்று ஒட்டிக் கொள்ளும் சுத்த சுயமரியாதைக் காரரான தி மு க தலைவரோ - அந்த மாநிலத்தைப் பற்றி பேசுவார்களா?-என்று என்னைக் கேட்காதீர்கள்!

மூர்தாபாத் எனும் நகரில் இந்தச் சம்பவத்தால் சட்டம் அமைதி கெட்டுவிட்டதென்று நான் கூறமாட்டேன். நிர்வாகத்தில் எதிர்பாராது ஏற்பட்டுவிடும

(2 ம் பக்கம் பார்க்க)

## நாவலருக்கு பம்பாயில் வரவேற்பு

பம்பாய், ஆக. 18 வெளிநாடுசென்று திரும்பும் நிதி அமைச்சர் டாக்டர் நாவலருக்கு பம்பாய் விமான நிலையத்தில் சிறப்பான வரவேற்புக கொடுக்க கழகத்தின் மராட்டிய மாநிலப் பிரிவு ஏற்பாடு செய்துள்ளது.

உலகத்தமிழ்பண்பாட்டு மாநாட்டில் கலந்துகொள்ள மோரீஸ் தீவு மற்றும் பிரான்சு இங்கிலாந்து ஆகிய நாடுகளுக்குச் சென்ற நிதிஅமைச்சர் டாக்டர் நாவலர் வருகிற 21ந்தேதிபம்பாய்வருகிறார் அன்று காலை 6 மணிக்கு பம்பாய் விமான நிலையத்தில் வரவேற்பு அளிக்கப்படுகிறது.

அன்று மாலை 5 மணிக்கு பம்பாய்த் தமிழ்ச்சங்கக் கலை அரங்கில் நாவலருக்குப் பாராட்டு விழாவும் கழக வெற்றி விழாவும் நடக்கிறது.

இரவு 7 மணிக்கு விமானத்தில் நாவலர் சென்னை திரும்புகிறார். இரவு 7 மணிக்கு பம்பாய் விமான நிலையத்தில் வழியனுப்பு விழா நடக்கிறது,

இந்த விழாவுக்கு மராட்டிய மாநில கழகத் தோழர்கள் திரண்டு வருமாறு மராட்டிய மாநில அமைப்பாளர் எஸ், எல். ஜான் கேட்டுக்கொண்டுள்ளார்.

## போர்க்குரல் தந்த எம்.எல்.ஏ.யிடம் கருணநிதி கெஞ்சல்

சென்னை, ஆக. 18. புதுவை, தி மு க இந்திரா காங்கிரஸ் கூட்டணி மந்திரிசபைமீது திமுக சட்டசபை உறுப்பினர் ராமலிங்கம் ஊழல் புகார் கூறியது தெரிந்ததே.

ராமலிங்கம் ''ஊழல் புகாரை நிருபித்தால் பதவி விலகுவேன்'' என இந்திரா காங்கிரசைச் சேர்ந்த அமைச்சர் ரேணுகா அப்பாத்துரை கூறியதும், அதையடுத்து புகாரை நிருபிக்க தயாராகயிருப்பதாகவும் ராமலிங்கம் அறிவித்துள்ளார். இந்நிலையில், புதுவை கூட்டணி மந்திரிசபைக்கு நெருக்கடி தோன்றியுள்ளது.

இதனால், இன்று கருணநித தலைமையில் புதுவை மாநில தி.மு.க சட்டமன்ற உறுப்பினர்கள் கூட்டம் நடந்தது.

அமைச்சர் சிவக்குமாரைத் தவிர மற்ற திமுக சட்டமன்ற உறுப்பினர்கள் இக்கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

ஊழல் புகார் கூறிய ராமலிங்கத்திடம், கருணநிதி ''இவ்வாறு பகிரங்கமாக ஊழல் புகார் களைக்கூற வேண்டாம் என்றும் புகார்கள்குறித்து கேட்பதாகவும் சமாதானம் கூறினராம். மற்ற திமுக உறுப்பினர்களும, ராமலிங்கத்தை சமாதானப் படுத்தினர்களாம்.

இக்கூட்டத்தில் பேசிய திமுக சட்டமன்ற உறுப்பினர்கள், இந்திரா காங்கிரஸ் மந்திரிகளும்,



சட்டமன்ற உறுப்பினர்களும் தங்களுடன் ஒத்துழைப்பு தரவில்லை என கூறியதாக கூறப்படுகிறது.

(8ம் பக்கத் தொடர்ச்சி)

குழுவைப் புறக்கணித்தார்களா என்பது மர்மமாக உள்ளது.

அழைப்பு இல்லாமலே அன்பரசு எம் பி கூட்டத்தில் கலந்துகொண்டார் என்று தெரிகிறது,

### பலத்த போலீஸ் பாதுகாப்பு

அசோகா ஓட்டலில் இந்திரா காங்கிரசு செயற்குழுக்கூட்டம் நடப்பதை ஒட்டி பலத்த போலீஸ் பாதுகாப்பு போடப்பட்டிருந்தது.

(நேற்று திருச்சியில் நடந்த இ.காங்கிரஸ் ஊழியர் கூட்டத்தில் நடந்த அடிதடி, ரகளை சம்பவங்கள் பற்றிய முழு விவரம்- 2-ம்பக்கம்)



மதுராந்தகத்தில் அறிவியல் ஆய்வுக் கூடத்துக்கு முதல்வர் புரட்சித்தலைவர் அடிக்கல் நாட்டினர்

## இழுபறித் தலைவரே இறுமாப்பு வேண்டாம்-4

# சுருதி பேதம் ஏனோ?

எம். ஜி. ஆர். அரசு புல்ல் செய்யட்டும் என்று இறுமாப்போடு பேசிய எம்.பி, சுப்பிரமணியம்-

இப்போது சுருதி இறங்கி வந்து- தான் சொல்லிய வார்த்தைக்கு நளினமான ஒரு அர்த்தத்தை நாட்டுக்குத் தந்திருக்கிறார்.

"அண்ணா திமுக அரசை டிஸ்மிஸ் செய்ய வேண்டும் என நான் பேசியது தமிழ்நாட்டில் நடக்கும் கொலைகள், வன்முறைகள், கற்பழிப்பு, கடத்தல், நக்சல்பாரிகளினால் ஏற்படும் கொலைகள் போன்ற சம்பவங்கள்பற்றி எம் ஜி ராமசந்திரனின் கவனத்தை கவரவே ஆகும். சட்டம் ஒழுங்கு கெடுவதால், மத்திய அரசிடம் இருந்து ஏற்படும் அனுவசியத் தொந்திரவுகளை தவிர்க்கவே முதலமைச்சரை எச்சரித்தேன்."

-மேற்கண்டவாறு எம் பி சுப்ரமணியத்தின்பேட்டி இந்துப் பத்திரிகையில் வெளிவந்திருக்கிறது.

புரட்சித்தலைவர் அரசைக் காப்பாற்றும் நோக்கத்துடன்தான் தாம் அப்படிப்பேசியதாக அவர் இப்போது சொல்கிறார்.

கழகஅரசு நிலைக்க வேண்டும் என்று அவர் கருதியதற்கு நன்றி.

ஆனால் மாநில அரசைக் கலைக்கச் சொல்லவோ அல்லது கலைக்கப்படுவதை தடுக்கவோ இந்த ஆசாமிக்கு எள்ளளவும் தகுதியில்லை.

இதை நாடு நன்கு அறிந்துதான் வைத்திருக்கிறது.

அகில இந்திய அரசியலில் இவர் ஒரு கிள்ளுக்கீரை தானே தவிர இமயமலையல்ல!

எதையாவது முதலில் உளறிக் கொட்டுவதும், எதிர்ப்பு வந்தால் சுருதியைக் குறைத்துக் கொள்வதுமாக எம் பி சுப்பிரமணியம் ஆகியிருக்கிறார்.

சுதந்திரமான ஒரு அரசியல் தலைவராக அவரை கருதினோம்.

ஆனால் சுக்குக் கண்ட இடத்தில் பிள்ளை பெறும் நிலையில் அவர் அரசியல் நடத்துகிறார்.

'தினமலர்' ஏட்டில் வந்துள்ள அவரது பேட்டி பின்படி,

எம் ஜி ஆர் ஆட்சி டிஸ்மிஸ் செய்யப்படும் என்று இவர் பேசவே இல்லையாம். பத்திரிகைக்காரர்கள் திரித்து வெளியிட்டு விட்டார்களாம். அதுமட்டுமல்ல அவரது அந்தப் பேச்சுக்கு அண்ணா தி மு க வைச் சேர்ந்தவர்கள் யாரும் எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை என்றும் எம் பி சுப்பிரமணியம் கூறியிருக்கிறார்:

கருணாநிதியுடன் கைகோர்த்த நாளிலிருந்தே- கண்டபடி உளறவும்-இஷ்டப்படி புளுகவும் இவர் ஆரம்பித்திருக்கிறார்.

எம் ஜி ஆர் ஆட்சி டிஸ்மிஸ் செய்யப்படும் என்று திருச்சியில் இம்மாதம் 9ந்தேதி எம் பி சுப்பிரமணியம் பேசினார்.

இம்மாதம் 10ந்தேதி மாலைமுரசு உள்ளிட்ட பல பத்திரிகைகள் அவரது அந்தப்பேச்சை வெளியிட்டன.

பேச்சு வெளிவந்த 8 நாள் கழித்து, தனது பேச்சைத் தவறாக வெளியிட்டுவிட்டார்கள் என்றும், திரித்து வெளியிட்டுவிட்டார்கள்என்றும் எம்.பி.எஸ். கூறுவது நாணயமான அரசியல்வாதிக்கு அழகல்ல!

இவர் திருச்சியில் பேசியதற்கு மறுநாளே 'அண்ணா' பத்திரிகையில் கண்டனம் தெரிவிக்கப்பட்டது.

அதற்கு அடுத்த நாளே அனைத்திந்திய அண்ணா தி மு க பொதுச்செயலாளர் ப உ ச அவர்கள் கடிதம்மூலம் கண்டனம் தெரிவித்தார்கள்.

நிலைமை இப்படி இருக்க, தமது பேச்சுக்கு அண்ணா தி மு க தரப்பில் எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை என எம் பி எஸ் புளுகுவது கருணாநிதி பாணி அரசியலாகும்.

ஒன்று-பேசிய பேச்சுக்கு மன்னிப்புக் கேட்கவேண்டும்.

அல்லது- தனது வாதத்துக்கு ஆதாரம் திரட்டி வாதாட முன்வரவேண்டும்.

இதையும் செய்யாமல், அதையும் செய்யாமல் குழப்புவதும், திசை திருப்புவதும் இரண்டும் கெட்டான்களின் வேலையாகும்.

கற்பழிப்புப் பற்றிய எம்.பி.எஸ்.புகாருக்கு நாளை பதிலளிப்போம்.

(நாளை)

புலிகேசி

# விளையாட்டு வீரர்களை உருவாக்கபுதியதிட்டம்: முதல்வர் அறிவிப்பு

**மதுராந்தகம், ஆக 18- விளையாட்டு வீரர்களை உருவாக்க ஒரு புதிய திட்டத்தைக் கழக அரசு செயல் படுத்தும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினர்.**

மதுராந்தகத்திலுள்ள சவுபான்மல் சவுகார் அரசினர் பெண்கள் மேல்நிலைப்பள்ளியில் 2லட்சத்து 30 ஆயிரம் செலவில் கட்டப்பட இருக்கும் ஆய்வுக் கூடத்திற்கு முதல்வர் புரட்சித்தலைவர் அடிக்கல் நாட்டினார்.

விழாவுக்கு மாவட்ட ஆட்சித்தலைவர் முத்துசாமி தலைமை வகித்தார்.

விழாவின் போது சமூக நலத்துறை சார்பில் உடல் ஊனமுற்றவர்கள் இரண்டு பேருக்கு பெட்டிக்கடை வைக்க தலா 4 ஆயிரம் ரூபாயும், மூன்று சிறுவர்களுக்கு காது கேட்கும் கருவியும் ஐந்து பெண்களுக்கு இலவச தையல் இயந்திரமும் உடல் ஊனமுற்றமூவருக்கு மூன்று சக்கரவண்டியும் முதல்வர் புரட்சித்தலைவர் வழங்கினர்.

## உதவி நிதி-மனைப்பட்டா

மதுராந்தகம் தாலுக்கா அலுவலகத்தில் கடைநிலை ஊழியராக பணியாற்றி பணிக்காலத்தில் மரணமடைந்த ஏழுமலை குடும்பத்திற்கு 10 ஆயிரம் ரூபாயைமுதல்வர் புரட்சிததலைவர்வழங்கினார்.

8 பேருக்குஇலவசவீட்டு மனைப்பட்டாவும்2பேருக்கு நிலப்பட்டாவும் நில உடைமை சீர்திருத்த அமைப்பின் கீழ் 5பேருக்கு பட்டாவும்விதவையைமணம் புரிந்த மாரி என்பவருககு 5 ஆயிரம் ரூபாயையும் முதலவர் புரட்சித்தலைவர் அளித்தார்.

மாணவ மாணவிகளுக்கும் முதல்வர் புரட்சித்தலைவா பரிசுகள் வழங்கினார்.

விழாவில் முதல்வர் புரட்சித்தலைவருக்கு, மதுராந்தகம் ஆரம்ப ஆசிரியா சங்கம, கல்வித்துறை சாரா பணியாளர் சங்கம் தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர் கூட்டணி, கிராம அதிகாரிகள் சார்பில கே ராமச்சநதிரன, ராதாகிருஷ்ணன, செங்கை மாவட்ட அலுவலா கழகம்சிடி பிரவு செலவராஜ் ஆகியோா மாலைகள் அணிவித்தனா.

புதிய கட்டிடத்திற்கு அடிக்கல் நாட்டி வைத்து முதல்வா புரட்சித்தலைவா பேசும்போது கூறிய தாவது:-

இங்கே புள்ளி விவரம் படித்த அம்மையார் எண்ணிக்கையை படித்து காண்பித்து பெருமைபட்டுக் கொண்டார். அதில் நியாயம் உண்டு. வெளியே சொல்லிக் கொள்ளவும உரிமை உண்டு என்ற வகையில் சொன்னா.

இங்கே படிக்கின்ற சிறுமிகள், செல்வகள் அதிகமாக வெற்றி பெற்றிருப்பது தமிழகத்தின் பெருமையை இந்தியாவின் பெருமையை காட்டுவதாக இருக்கிறது.

(கைதட்டல்)

இதற்கு நீங்கள் கைதட்டுகிறீர்கள் ஆனல் ஆண்கள்?

பெண்கள் 58 சதவிகிதமும் ஆண்கள் 46சதவிகிதமும் வெற்றி பெற்றதாகச் சொன்னார் 9 சதவிகிதம் அதிகமாக பெண்கள் வெற்றி பெற்றிருக்கிறீர்கள் என்றால் சமத்துவம கேட்க வேண்டியவர்கள் யார்.நான் இதற்கு என்ன சொல்வது? ஆண்களுக்கு அதிக சமத்துவம் வேண்டும் என்று கேட்க வேண்டுமா?

## ராமர் பட்டாபிஷேகம்

இதைச் சொன்னால் கோபம் வரும். இவ்வளவு கஷ்டப்பட்டு படித்தோம் ஒருவார்த்தை பாராட்டக் கூடாதா என்று கேட்பார்கள்.

நான் வந்தவுடன் ராமர் பட்டாபிஷேகம் நாடகத்தை நடத்திக் காட்டினார்கள். இந்த குழந்தைகள் எத்தனை மணிநேரம் இந்த வேடத்தோடு காத்திருந்தார்களோ அத்தோடு வெண்பா பாடல் பாடி முடிக்கும் வரை அசையாமல் நின்றிருந்தார்கள் இதன்மூலம் இந்தப்பள்ளியில் இருக்கும் கட்டுப்பாட்டை உணர்கிறேன்

அந்தபொறுமைஎங்களைப் போன்றவர்களுக்கு இல்லையே.

இங்கு "என்சைக்ளோபீடியா"புத்தகத்தைபரிசாக பெற்றார்கள் அதுஉலகத்திலுள்ள அனைத்துக்கும் உரியதல்ல. மாணவர்களுக்கென்று இருப்பது படித்து பயன்பெறவேண்டும்.

இந்தப்பள்ளியில் நூல் நிலையம் இருக்கிறது 800 நூல்கள்இருப்பதாகச் சொன்னார்கள். அவை எண்ணிக்கை 8ஆயிரமாக உயரவேண்டும்.

பெரியவர்கள் வளர்ச்சிக்கு உதவவேண்டும். அரசும அதற்கு உதவி செய்யும்.

(கைதட்டல்)

இந்த நூல நிலையத்தில் வைக்கப்பட்டிருக்கும பட்டியல்ல பதிவு ஆவதன மூலம் எத்தனை மாணவிகள் படித்தார்கள என்ற முறையில் நாட்டின வளர்ச்சியை பார்க்க முடியும்.

## அரசும் உதவும்

நாட்டிற்கு தேவையான அத்தனை நூல்களும் அதில் இடம பெறவேண்டும் அதற்கு கட்டிடம போதாவிட்டால் வேறு கட்டிடம் கட்ட மக்கள் உதவ வேண்டும் அரசும் உதவிசெய்யும்,

இந்த பள்ளிக்கு உதவிகளை செய்யும் தரும சந்த் அவர்களை பார்க்கிறேன். அது பெற்றோரே வைத்த பெயர். ஆனல் அந்த குணம் அவருக்கு பிறப்பிலேயே இருக்கிறது.

சில குழந்தைகளுக்கு இயற்கைக்குப் பொருந்தாமல் பெயர் வைத்துவிடுகிறார்கள்,

தரும்சந்த் இனத்தைப் பார்த்தால் பணத்தை சம்பாதிப்பதிலே கண் வைத்திருப்பவர்கள் என்று சொல்லுவார்கள். ஆனல் இங்கே வந்த பிறகுதான் அவர் எவ்வளவு உயர்ந்திருக்கிறார் என்பதை பார்க்க முடிகிறது.

இப்படிப்பட்டவர்கள் நாட்டில் நிறைய இருக்கிறார்கள். அவர்கள் மக்கள் மத்தியில் வர வேண்டும்,

இந்தப் பள்ளியில் நாட்டியத்திலும் ஆர்வம் காட்டுகிறார்கள் என்பது தெரிகிறது. அதிலும் பெண்கள் அதிகம் ஆர்வம் காட்டுகிறார்கள்,

தராசு தட்டு ஒரே நிலையில் இருந்தால்தான் நீதி என்கிற ஊசி சரியாக இருக்கும். எந்த பக்கமாவது சாய்ந்து விட்டால் ஒற்றுமையைப் பார்க்கமுடியாது.

எத்தனைக்காலம் வாழ்ந்தாலும் அந்த குழந்தைகளிடம் சமத்துவம் உருவாக்கித்தருமா என்பதை நினைத்துப் பார்க்க வேண்டும்,

ரஷ்யாவிலும் அமெரிக்காவிலும் உயர்ந்ததாக உள்ள கலாச்சாரத்தை தமிழகம் பெற வேண்டும் என்பதை எண்ணிப் பார்க்கவேண்டும்.

## மழலைகள் வாழ்த்து

நான் வரும் போது குழந்தைகள் எனக்கு வாழ்த்துக் கூறினார்கள்.

வாழ்க கூறுவதற்கு வயது தரம் வேண்டாம். ஒழிக என்று சொல்வதற்கு தான் வயது தரம் வேண்டும்.

ஒழிக என்று சொல்லும் வார்த்தையையே மாணவர்களுக்குச் சொல்லிகு தரக்கூடாது என்று ஆசிரியர்களை வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

மாணவர்கள் உடற் பயிற்சி செய்யவேண்டும்.

உடற்பயிற்சிக்காக, விளையாட்டுக்காக தனி இலாகாவை ஏற்படுத்தி அதற்காக ஒரு அமைச்சரை நியமிக்க தமிழக அரசு கருத்து கொண்டிருக்கிறது.

விளையாட்டில் ஆர்வம் கொண்ட ஆண்டு தோறும் 5 குழந்தைகள் கிடைத்தால் கூட போதும் அவர்களுக்கு பயிற்சிதந்து அவர்களை சிறந்த விளையாட்டு வீரர்களாக்கி, அவர்கள் வேலைக்குச் சென்றுதான் குடும்பம் பிழைக்கவேண்டும்என்றால் அந்த தொகையை அரசே தர இருக்கிறது.

உலக நாடுகள் கலந்து கொள்கிற 'ஒலிம்பிக்' போட்டியில் கலந்து கொண்டு வெற்றி பெற்று வருகிற குழந்தை தமிழகத்தைச் சேர்ந்தவராக இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன்,

சமீபத்தில் ஒலிம்பிக் நிகழ்ச்சியில் பங்கேற்று வெற்றி பெற்றிருக்கும் பாஸ்கரையும் மற்ற வீரர்களையும் தமிழகம்பெருமைபடுத்த இருக்கிறது.

இவ்வாறுமுதல்வர்புரட்சித்தலைவர் கூறினர்.

விழாவில் ப உ ச, ஜேப்பியார் எம் எல் சி மோகன, ரங்கம் எம்.பி.சட்டமன்ற உறுப்பினர்கள் உக்கம சந், ஆனூர் ஜெகதீசன் ஜெகத்ரட்சகன், அபதுல் ரசாக், வெங்கடசுப்பிரமணியம் முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் பாக்கூர் சுப்பிரமணியம் மற்றும் பலர் பங்கேற்றனர்.

# ப. உ. ச. கடிதம்

(1-ம் பக்க தொடர்ச்சி)

விருத்துகள்.

குஜராத் மாநிலத்து நிதிஅமைச்சர் சனட்மேத்தா என்பவரை எதிர்கட்சியினர் விலைவாசிப் போராட்டம் என்ற பேரால் அடித்து வளையல்களை பரிசாகத் தந்திருக்கிறார்கள். காவல் துறையினரும் அமைச்சரின் மெய்காப்பாளரும் அமைதியாகப் பார்த்திருக்கிறார்கள்! போலீஸ் வேன் கொளுத்தப்பட்டது!

இவைகளெல்லாம் நம் நாட்டின் கௌரவத்தைக் காப்பாற்றக்கூடியவைகளல்ல!

தமிழ் நாட்டில் இப்படி ஏதாவது நடந்ததா? நடத்த முடியாதவர்களா எதிர்க்கட்சியினர் என்று நினைக்காதீர்கள்!

**முஸ்லீம்கள் தொழுகையின் போது நடந்த சம்பவம் தி.மு.க. தலைவர் முஸ்லீம் லீகின் காப்பாளராயிற்றே ஏன் மௌன விரதம் என்றால் அவர் கண்கள் சிவக்கும்! வசைகளை வாரி நம்மீது வீச வாய்த் துடிக்குப்!**

புரட்சித்தலைவர்மீது மக்களுக்கு வெறுப்பு ஏற்படல் வேண்டுமென்று தான் கற்ற 'ஜால' வித்தைகளையெல்லாம் செய்கிறார்!

தாலிக்கு மான்யம் என்று துவக்கி திருமணத்திற்கு அன்பளிப்பென்று வந்துள்ளது. புதுவை மாநிலம் முழுவதற்கும் தி மு க-இ காங்கிரஸ் கூட்டணி ஆட்சி அமைந்து நடைபெற்றத் திருமணங்களே நாலுதான்! தலா ரூ. 250 கொடுக்க பெரிய தடபுடலான விழா நடந்துள்ளது: அந்த நான்குபேருக்கும் நம் வாழ்த்துக்கள்!

அறிவித்த திட்டங்கள் அனைத்தையும் ஒரே நாளில் நிறைவேற்ற வேண்டுமென்று திமுக தலைவர் துடிக்கிறார்

திட்டங்களை நிறைவேற்ற ஐந்தாண்டுகாலம் மக்கள் வாய்ப்பளித்துள்ளனர்! அதற்குள்ளாக ஏன் துடிக்கிறா?

பட்டினியில்லாத சமுதாயத்தை உருவாக்க புரட்சித்தலைவர் முயற்சிக்கிறார்! அதை கேலி பேசி முறியடிக்க முயற்சிக்கிறாரேயொழிய நடைமுறை சாத்தியக் கூற்றைச் சொல்லி பசிப் பிணியைப் போக்க யோசனை சொல்லக்கூடாதா?

தீயை அணைக்க வாளியில் தண்ணீர் எடுத்துச் செல்பவனைக் கேலி செய்வதும், தீயை அணைக்க இவனால் முடியுமா என்று திண்ணைத்தூங்கி பேசலாம். தி மு க தலைவர் பேசலாமா?

தாழ்த்தப்பட்ட ஜாதி பெண்ணை மணப்பதாலேயே தீண்டாமை ஒழிந்து விட்டதா என்றால் அது ஒரு முயற்சி என்று பாராட்டி உற்சாகப் படுத்த வேண்டும்.

என்ன செய்வது நெஞ்சிலே நெருப்பிருக்கும் காரணத்தால்தான் வார்த்தைகள் வெறுப்பின் சின்னங்களாகத் தெரிகிறது.

'வெறுக்கக் கற்றுக்கொள்' என்பவன் தலைவனா? 'அன்போடு பழகு' என்பவன் தலைவனா?

நண்பர்களே, நம் தலைவர் அன்போடு பழகு என்று சொல்பவர். அவர் ஆட்சியை மீண்டும் கலைப்பதென்பது மண்ணைவாரி தலையில் போட்டுக்கொள்வதற்குச் சமம்!

எதிர் கட்சியில் பேரறிஞர் அண்ணா இருந்த போது ஆளுங்கட்சியைத் தாக்காமல இல்லை, ஆனால் வார்த்தைகளில் நயம் இருக்கும், தன் கருத்துக்காக வாதாடும்போது அழுத்தமான சொற்கள் கூட வரும். ஆனல அண்ணா சட்டப் பேரவை அலுவல்கள் நடக்கவொட்டாது தடுத்தார் என்று எவரும் சொல்ல முடியாது!

காரணம் விரக்திக்கு அவர் ஆளானதே இல்லை!

பாவம் இன்றைய தி. மு. க. தலைமை விரக்தியின் அடையாளம்! அதன் விளைவுதான் கூச்சலும் குழப்பமும்.

அன்புள்ள

**ப. உ. ச.**

## "கீழே உட்காருடா" கூச்சல்-சட்டை கிழிப்பு

# எம். பி. எஸ் ஓட்டம்: இ.காங்கிரஸ்கூட்டத்தில் ரகளை-அடிதடி-கலாட்டா

**திருச்சி, ஆக. 18- இந்திரா காங்கிரஸ் ஊழியர் கூட்டத்தில் கலாட்டாவும், ரகளையும் அடிதடியும் ஏற்பட்டது. திருச்சி மாவட்ட செயலாளரின் சட்டையைக் கிழித்து, 'கீழே உட்காருடா' என்று கூச்சலிட்டனர். பெரும் குழப்பத்தில் கூட்டம் கலைந்தது.**

ஒருவருக்கொருவர்மோதிக்கொண்டு கைகலப்பில் ஈடுபட்டதற்குப் பின்பு தமிழ்நாடு இ.காங்கிரஸ்தலைவர் எம்.-பி சுப்ரமணியத்தை பாதுகாப்பாக ஒரு அறைக்கு அழைத்துச்சென்றுகதவைச் சாத்திக் கொண்டனர்.

திருச்சி மாவட்ட இந்திரா காங்கிரஸ் ஊழியர் கூட்டம் தில்லை நகா மக்கள் மன்றத்தில் நடந்தது.

மாலையில் எம் பி சுப்ரமணியம் கொடி ஏற்றி வைத்தார். தமிழ்நாடு இ. காங்கிரஸ் துணைத் தலைவர் பழனியாண்டி தலைமை வகித்தார்.

கூட்டததில் திருச்சி மாவட்டசெயலாளர் அரியலூர் கிருஷ்ணன பேசும் போது பலத்த கூச்சலும் குழப்பமும் ஏற்பட்டது.

"கீழே உட்காருடா. தலைவர் சாமிநாதனைப் பற்றிப் பேச உனக்கு என்ன அருகதை இருக்கிறது? மாவட்டச் செயலாளர்களில் நீயும் ஒருவன் தானே?" என்றுகூறிக் கொண்டு சிலா மேடையை நோக்கி பாய்ந்தனர்.

## சட்டை கிழிப்பு

பாலகிருஷ்ணனின் சட்டையைப பிடித்துக் கிழித்தனர் ஒருவருக்கொருவர் கடுமையாக மோதிக் கொண்டனர் கைகலப்பு ஏற்பட்டது.

## கதவைச் சாத்து

மேடையில் அடிதடி நடப்பதைக் கண்டதும் திருச்சி நகர இ. காங்கிரஸ தலைவர் ராகவன பிள்ளை, துணைத்தலைவா தண்டபாணி ஆகியோா எம் பி சுப்பிரமணியத்தை ஒரு அறைக்குள் அழைத்துச் சென்று கதவைச் சாததிக்கொண்டார்கள்.

அடிபட்ட பாலகிருஷ்ணனை நகர காங்கிரஸ் செயலாளா கோடையிடி பெருமாள், வக்கீல்மதானி ஆகியோா கைத்தாங்கலாக வெளியே அழைத்து செல்ல முயன்றனா.

## மீண்டும் குத்து அடி-உதை

அந்த சமயத்தில் அங்கே இருந்த சிலர் ஓடி வந்து கோடையிடி பெருமாளையும மதானியையும் சரமாரியாகக் குத்தினார்கள். வயிற்றில் குத்தினார்கள். "அய்யோ....அப்பா..... அம்மா..."என்றுவலியால் அவர்கள் துடித்தனர்.

இரு கோஷ்டிகளும் போட்டி போட்டுக் கொண்டு பலத்த கூச்சல் எழுப்பினர்-பெரும் குழப்பம் ஏற்பட்டது.

## மீண்டும் குழப்பம்

அதற்குப்பின் திருச்சி மாவட்ட இ. காங்கிரஸ் தலைவர் சாமிநாதன் மேடைக்குவந்து பேசினர். அப்போது சாமிநாதன் வாழ்க என்றும் 'ஒழிக' என்றும் ஒலி முழக்கங்கள் எழுந்தது.

இருதரப்பினரும் வாய்ச் சண்டை போட்டுக் கொண்டதில் பெரும் கூச்சலும், குழப்பமும் எழுந்தது. குழப்பம் தொடர்ந்து நீடித்ததால் சிறிது நேரத்தில் கூட்டம் கலைந்து சென்றது,

கூட்டம் ரகளையில் முடிந்து விட்டதால் அறைக்குள்ளேயே ஒரு சிலரை வைத்துக் கொண்டு கூட்டத்தை நடத்தினர்.

எம் பி சுப்ரமணியம், சாமிநாதன், தமிழழகன் ஆகியோர் அந்தக்கூட்டத்தில் கலந்து கொண்டனர்

## புதுவை மந்திரிசபை நெருககடி முற்றுகிறது

# இ.காங்கிரஸ்அமைச்சர் சவால்: தி. மு. க. எம். எல். ஏ. ஏற்றார்

**பாண்டிச்சேரி, ஆக. 18- என் மீது கூறிய ஊழல் புகாரை நிரூபித்தால் பதவி விலகுகிறேன் என புதுவைமாநில அமைச்சர் ரேணுகா அப்பாதுரை (இ. காங்கிரஸ்) விடுத்த சவாலை, புகார் கூறிய தி மு க எம எல் ஏ ராமலிங்கம் ஏற்றுக் கொண்டு ஊழலை நிரூபிக்கிறேன் எனத் தெரிவித்துள்ளார்.**

புதுவை மாநில தி மு க இந்திரா காங்கிரஸ் கூட்டணி மந்திரி சபைமீது திமுக சட்டமன்ற உறுப்பினா ராமலிங்கம் ஊழல் புகார் தெரிவித்தது தெரிந்ததே.

அதிலும், குறிப்பாக இந்திரா காங்கிரஸ்கட்சியைச் சேர்ந்த அமைச்சர் ரேணுகா அப்பாதுரை மீது சட்டமன்ற உறுப்பினாராமலிங்கம்பல்வேறு ஊழல் புகார்களைக் கூறியிருந்தாா.

## மந்திரி சவால்

இதற்கு பதிலளித்த அமைச்சா ரேணுகா அப்பாத்துரை "தான சம்பந்தப்பட்ட துறையில் ஊழல் நடந்ததாக நிரூபிக்கபபடுமானல் அரசியலில் இருநதே விடை பெறுகிறேன்" என சவால் விடுத்தார்.

இந்தச்சவாலுக்கு சட்டமன்ற உறுப்பினர் ராமலிங்கம் பதிலளித்து தெரிவித்துள்ளதாவது:

"அமைச்சர் ரேணுகா அப்பாதுரை அரசியலை விட்டு போவதென்பது ஒன்றும் பெரியவிஷயமல்ல அவர் கட்சிக்கும் அரசியலுக்கும் வந்ததேதேர்தலுக்கு 10தினங்களுக்கு முன்புதான். இவரது ஊழல்கள் பற்றி விரைவில் டெல்லி சென்று பிரதமரைச் சந்தித்து எடுத்துக் கூற உள்ளேன்.

இவ்வாறு ராமலிங்கம் தெரிவித்துள்ளார்,

Published by K. Ravindran on behalf of Thangamani Publications, 275, Avvai Shanmugam salai, Madras-14 and printed by him at Print House, 1, First Main Road, United India Colony, Madras-24. Editor: E. PARASURAMAN,

# கழக உறுப்பினர் அட்டை வழங்குதல்

கீழ்க்கண்ட ஊர்களுக்குச் சம்பந்தப்பட்ட அமைப் பாளர்கள் முகவரிக்கு உறுப்பினர் அட்டைகள் அஞ் சல் மூலமாக அனுப்பிவைக்கப்பட்டுள்ளன.

அமைப்பாளர்கள் உறுப்பினர் அட்டைகளை முறை யாக கழக உறுப்பினர்களுக்கு உடனடியாக வழங்கிட வேண்டும்.

உறுப்பினர் அட்டைகள் வழங்குவதில் எவ்விதக் குறைபாடுகளும் இல்லாமல் செயல்படுவது அமைப் பாளர்களின் பொறுப்பாகும். வழங்க மறுத்தால் அமைப்பாளர்கள் மீது கடுமையான முறையில் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும் உறுப்பினர்கள் ஒவ் வொருவரும் உறுப்பினர் அட்டையைப் பாதுகாப்பாக வைத்திருக்கவேண்டும்.

உறுப்பினர் சேர்க்கப்பட்டுள்ள உறுப்பினர் தாள் களையும் உரிய தொகையையும் உடனடியாக தலைமை நிலையத்திற்கு அனுப்பிவைக்குமாறு பொறுப்பான வர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

**எம். எஸ். அப்துல்காதர்**
தலைமை நிலையச் செயலாளர்;

### திருப்பெரும்புதூர்
சோழம்பேடு-இரா ஜெயராமன்
மொரப்பாக்கம் - டி சண்முகம்
84, அவரைப்பாளையம் - ஆர் பாரதியார்

### சேலம் மாவட்டம்
அந்தம்பாளையம் - எஸ் பெரியசாமி
நடுமேடு - பி துரைசாமி
நல்லூர் - வி பொன்னுசாமி
சூரம்பாளையம் - எஸ் ஆர் பெருமாள்
வில்லிபாளையம் - சி கருப்பையா
வாழ்நாயக்கன் பாளையம் - வி பி ராமசாமி
உலகபாளையம் - கே வி சுப்ரமணியம்
செட்டியாம்பாளையம் - எம் பாலுசாமி
பரமத்தி - எம் சுபான்
மறவர்பாளையம் - எம் வி ஏழுமலை
உலகபாளையம் - வி பழனிசாமி
நல்லூர் - க ஈஸ்வரன்
கோதூர் - கே சின்னத்தம்பி
மூசல்நாயக்கன்பாளையம் - கே வேலுசாமி
கோலாரம்-வி,சி. பெரியசாமி
மூணியகவுண்டம் பாளையம்-க. பழனியப்பன்
போத்தனூர்-ம. கணேசன்
புரம்பூர்-க, பொன்னுசாமி
குச்சிப்பாளையம்-இரா. சிப்பிரமணியம்
நல்லாகவுண்டன்பாளையம்-எம்,ராஜீ
ஜேடர்பாளையம் - வெ பன்னீர்செல்வம்
ஜமீன்இளம்பிள்ளை - எஸ் ராமசாமி
ஆண்டிப்பாளையம் - கே வெங்கடாசலம்
இ நல்லாகவுண்டன்பாளையம் - கே சுப்பிரமணியம்
கே அய்யம்பாளையம் - வி பி பத்ரிநாராயணன்
வடுகபாளையம் - சி கணேசன்
கரும்பேகம் பாளையம் - கே. சண்முகம்
பெரியமருதூர் - வி. ரங்கசாமி
தெற்குசெல்லப்பன்பாளையம் --எம்,பழனிசாமி
செய்யாம்பாளையம் - எஸ் நடேசன்
பெருங்குறிச்சி - எம்.சிதம்பரம்
கபிலர்மலை - சு ராஜேந்திரன்
குச்சிப்பாளையம் - என வி குமரவடிவேல்
ஆனங்கூர் - எ செல்லப்பன்
கபிலக்குறிச்சி - கே சுப்பிரமணியம்
நகப்பாளையம் - ஆர் சின்னசாமி
அண்ணாநகர் - வி முருகேசன்
கொளக்காட்டுப்புதூர் - து அம்பிகாபதி
பழநாயக்கன்பாளையம் - கே சுந்தரம்
கவுண்டனூர் - டி. சின்னசாமி
பள்ளிப்பாளையம் - ஆர் பழனிவேலு
மேட்டாங்காடு - சி மாசிலாமணி
காவேரி - பி ராஜமாணிக்கம்
குட்டிமேய்க்கம்பட்டி - கே பொன்னுசாமி
மேட்டுக்காடு - சி சேமலை
பாப்பாங்காடு - கே சம்பத்
சூரியம்பாளையம் - வீ நடராஜன்
வாள்ராசபாளையம் - சேட்டு (எ)எம் செங்கோடன்
கோட்டைமேடு - வி கருப்பண்ணன்
சித்தாராம் பாளையம் - சுந்தரவேலு
பழையபாளையம் - சி ராமசாமி

### செங்கை மாவட்டம்
குண்டுமேடு - தி ப கண்ணன்
தாங்கல்கரை - டி சுப்பன்
வெள்ளவேடு - எஸ் கே பாபு
வீரராகவபுரம் - சி வரதராசன்
கொரட்டூர் கிராமம் - மு முனியப்பசௌத்ரி
மேட்டுப்பாளையம் - க தாமோதரன்
காவல்சேரிகிராமம் - கே நாரயணசாமி
திருநின்றவூர் - ஓ டி செங்கல்வராயன்
பெப்பூர்தாங்கல் - டி எஸ் தேவன்
24 கூடப்பாக்கம் - கே பாலகிருஷ்ணன்
10 சேஷாநகர் - ஜி ஜார்ஜ்
காட்டுப்பாக்கம் - மு துரையரசு
பிடாரிதாங்கல் - பி கே மாதவன்
திருமணம் - டி எஸ் திருநாவுக்கரசு
திருநின்றவூர் - வைத்தீஸ்வரன்
பூந்தமல்லி பி ஓ - பி குட்டி
திருமணம் - பி சொக்கலிங்கம்
குந்தம்பாக்கம் - எம் பழனி
இருளபாளையம் - கே முத்து
40 கெங்குரெட்டிகுப்பம் - எஸ் பி ஜேசுதாஸ்
118 அகரமேல் - ஆர் ராமலிங்கம்
நேமம் பி ஓ - எஸ் ஜெகந்நாதன்
நேமம் பி ஓ - பி பன்னீர்
5/26 ஆண்டர்சன்பேட்டை - எம் லோகநாதன்
18 நிமிலச்சேரி பி ஓ - ஜீவரத்தினம்
சுங்குவாசத்திரம் - எஸ் முஸ்தாபா
திருமங்களமதுரா - ஜே யுவராஜ் (இளவரசு)
அழகூர்கிராமம் - ஜி குப்பன்
ஸ்ரீபெருமந்தூர் - வி மாரிமுத்து
114 பாடிநகர் - சி துரைசாமி
ஆரணேரி - எ ஜானகிராமன்
ஸ்ரீபெருமந்தூர் - பி ராமுலு
நத்தமேடு கிராமம் - டி. பூபதி
கன்னிகைப்பேர் - தே சாமுவேல் நேசரத்னம்
திருப்போரூர் - வி சிவப்பிரகாசம்
திருப்போரூர் - எம் பரமசிவம்
திருப்போரூர் - ஆலை ச இளங்கோ
கோட்டமேடு - கே கணபதி
நாவலூர் - சி முத்துசாமி
மூள்ளிப்பாக்கம - ஏ துலுக்காணம்
செம்மஞ்சேரிகுப்பம - பி சுகுமாரன்
திருப்போரூர் - எஸ் கணேசன்
வெண்மேடு - ஏ சுந்தரமூர்த்தி
மடையத்தூர் - ஏ மாரி

மற்ற மாவட்ட, தொகுதி, ஒன்றியங்களில் உள்ள கிளைகளுக்கு உறுப்பினர் அட்டைகள் அனுப்பப்பட்டு வருகின்றன.

---

## "புதுமலர்" மாத இதழ் வெளியீட்டு விழா

சென்னை, ஆக. 18-
எழுத்தாளர் முன்னேற்றக் கழகம் சென்னை மாவட்ட அமைப்பு சார்பில் கவி யரங்கம் நடந்தது.

இந்திரா நகரிலுள்ள இளைஞர் விடுதியில் நடந்த இந்த கவியரங்கிற்கு பி.டி ராகவன் தலைமை வகித் தார்.

அ பொ நாராயணன் முன்னிலை வகித்தார். ஆணையூர் இஸ்மாயில் வர வேற்புரையாற்றினார்.

''நாட்டுரிமைக்குப் பின் கவிஞன் நிலை'' என்ற தலைப்பில் கவியரங்கம நடந்தது. புலவர் காவிரிச் செல்வன், சிலம்படியான், இரா தேன்மொழியான், வண்ணை வளவன், மலர் கண்ணன், இறைவன், ராஜசேகரன், வண்ணை மூர்த்தி, எச் முகமதான், அ ச மூர்த்தி, கே. கோபால், இளஞ்சேரல் சுதாகர், முத்தரசன், எஸ். கணேசன், நெல்லை திருமகன், ஏ. செல்வராசு இளமுகிலன், ஓ வே கண் ணன், செம்பரிதி ஆகியோர் கலந்து கொண்டு கவிதை பாடினர்.

பி செல்வராஜ் நன்றி கூறினார்.

பின்னர் ''புதுமலர்'' என்ற கையெழுத்து ஏடு வெளியிட்டு விழா நடந் தது.

கவிஞர் தஞ்சை ராமா னுஜம் தலைமையில் அ. பொ. நாராயணன் நூலை வெளியிட்டார்.

மக்கள் செய்தி மு கோ வசந்தன் நூலைப் பெற்றுக் கொண்டார்.

பி டி ராகவன், ஆணை யூர் இஸ்மாயில், தாழம பேடு கவிப்பித்தன், நாஞ் சில் புதுமையாளன் ஆகி யோர் கலந்துகொண்டு பேசினர்.

---

# குட்டி மிசா-
# ஊரடங்கு உத்தரவை மீறி
# கலவரம் நீடிப்பு

## உத்திரப்பிரதேசத்தில் மேலும் பலர் சாவு-
## இன்று கூட இருந்த சட்டசபை ஒத்திவைப்பு

**லக்னோ, ஆக 18-உத்திரப்பிரதேச மாநிலத்தில் குட்டி மிசா சட்டம் பிறப்பிக் கப்பட்ட பிறகும் பல இடங்களில் ஊரடங்கு உத்தரவு போடப்பட்டிருந்தும் கூட தொடர்ந்து நீடித்த வன்முறைச் சம்பவங்களில் 5 பேர் உயிரிழந்தனர். இதையடுத்து இன்று கூடயிருந்த சட்டசபை 27-ந் தேதிக்கு ஒத்திவைக் கப்பட்டுள்ளது. குஜராத் மாநிலத்திலும் தொடர்ந்து வன்முறைச் சம்பவங் கள் நடந்து வருகின்றன.**

வட மாநிலங்களில் கடந்த சில நாட்களாக வன்முறை சம்பவங்கள், கலவரங்கள் நடந்து வரு வது தெரிந்ததே.

உத்திரபிரதேசமாநிலம் மொராதாபாத் நகரில் மட்டும் நடந்த கலவரத் தில் 130பேர் கொல்லப் பட்டனர்.

இதையடுத்து வன் முறையை தடுக்கவிசாரணை யின்றி சிறையில் தள்ள வழி செய்யும் தடுப்புக் காவல் சட்டத்தை (குட்டி மிசா) உத்திர பிரதேச அரசு பிறப்பித்தது பல பகுதிகளில் ஊரடங்கு உத் தரவும்பிறப்பிக்கப்பட்டது இத்தனையும்மீறி நேற்று உத்திரப்பிரதேச மாநிலத் தில் அலிகார் பகுதியிலும் கலவரம் பரவியது.

ஊரடங்கு உத்தரவு போடப்பட்டிருந்த மொராதாபாத் நகரில் நேற்று நடந்த வன்முறை சம்பவத்தில் 3 பேர் கொல லப்பட்டனர்.

### அலிகார்

அலிகார் நகரில் நேற்று நடந்த கலவரங்களில் 2பேர் கொல்லப்பட்டனர் வீட்டு மாடிகளில் இருந்து துப்பாக்கிகளால் சிலர் போலீசாரை நோக்கிச் சுட்டனர். இதையடுத்து அலிகாரில் ராணுவம் ரோந்து வந்தது.

மொராதாபாத், மீரட், பெய்ரேலி, பிலிபிட், அலி கார் ஆகிய மாவட்டங் களில், பல பகுதி களில் ராணுவம் பாதுகாப்பு பணிகளை மேற் கொண்டுள்ளது.

### சட்டசபை ஒத்திவைப்பு

உத்திரப்பிரதேச மாநிலத்தில் நிலவும் அசாதாரணமான நிலை, மையை அடுத்து இன்று (18ந் தேதி) கூடயிருந்த மாநில சட்டசபை 27ந் தேதிக்கு ஒத்திவைக்கப் பட்டுள்ளது.

### குஜராத்

குஜராத் மாநிலத்தில் ஆமதாபாத்நகரில் நேற் றும் தொடர்ந்து வன் முறை சம்பவங்கள் நடந் தன.

பஸ்கள் மீது கற்கள் வீசப்பட்டன இதில் இருவர் படுகாயமடைந் தனர்.

நகரில் ஒரு தபால் நிலையத்திற்குத் தீ வைக்கப்பட்டது.

நகரை சுற்றியுள்ள பகுதி களில் ஆங்காங்கே வன் முறைச் சம்பவங்கள் நடந் தன. நகரில் பல இடங் களில் ராணுவ வீரர்கள் ரோந்து வந்தனர் நகரில் பலஇடங் களில் தொடர்ந்து பதட்ட நிலை நிலவி வருகிறது.

---

அண்ணா நகர் தொகுதியில்

## அன்னை சத்தியா மன்றங்கள் திறப்பு

சென்னை, ஆக. 18-
சென்னை 73-வது வட்டம் கதிரவன் காலனி, 74 வது வட்டம் பொன்னுவேல் தோட்டம் 75 வது வட் டம் பெருமாள்பிள்ளை லேன், சி பி சிற்றரசு காலனி, 77-வது வட்டம் விநாயகபுரம ஆகிய இடங் களில் அன்னை சத்தியா மகளிர் மன்ற திறப்பு விழாக்களும். கழகக் கொடி ஏற்று விழாக் களும் நடந்தன.

தென்சென்னை மாவட்ட மகளிர் பிரிவு அமைப்பா ளர் சந்திரா மோகன் மன் றப் பெயர் பலகைகளை திறந்து வைத்தார். சுலோ சனா சம்பத் கழகக் கொடி களை ஏற்றினார். அண்ணா நகர் தொகுதி மகளிர் பிரிவு அமைப்பாளர் ராஜ லட்சுமி கோலப்பா இனிப் புகள் வழங்கினார்.

வ கோதண்டராமன், ஜெ சரசா, டி ஆர் சீனி யம்மாள், டி எல் ராதா கிருஷ்ணன், துவாரக நாதன். பி டி ராஜன், டி சந்திரன் புஷ்பலிங்கம்,

ஜெயராமன், இரா ஆனந்தராஜன், அப் துல்லாபாய், லட்சுமியம்மா கமலாட்சி, சலிமா, டி. அனுசுயா எம் எஸ் சரஸ் வதி- லட்சுமியம்மாள் ராதாம்மாள், பேபி, ஜெக தீஸ்வரி, ரத்தினம்மாள், ராஜகுமாரி ஆகியோர் கலந்துகொண்டு பேசினர்.

---

மாநில சுயாட்சி மாநாட்டு தீர்மானம்:

# மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வழங்க சட்டத் திருத்தம் தேவை

**மதுரை, ஆக. 18- மாநிலங்களுக்கு கூடுதல் அதிகா ரம் வழங்க அரசியல் சட்டத்தை திருத்த வேண்டும் என்று மதுரையில் நடந்த மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு கட்சியின் மாநில சுயாட்சி மாநாட்டில் தீர்மானம் நிறை வேற்றப்பட்டது.**

மாநில சுயாட்சி கோரிக் கையை வலியுறுத்தும் வகையில் அனைத்துக் கட்சி மாநாடு மார்க்சிஸ்டு கட்சி சார்பில் மதுரை யில் நடைபெற்றது.

தமிழ்நாடு மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு கட்சியின் செயலாளர் ஏ பாலசுப்பிர மணியம் இம்மாநாட் டிற்கு தலைமை வகித்தார்.

கேரள முதல்வர் நாயனார், குமரிஅனந்தன், ப நெடுமாறன், மார்க் சிஸ்டு கம்யூனிஸ்டு எம் எல் ஏக்கள் சங்கரய்யா, நல்லசிவம், பழனிவேல், ஏ ஆர் பெருமாள் (பார் வர்டுபிளாக்) கிளமெண்ட் (கிருஸ்துவ ஜனநாயக முன்னணி) மற்றும் கழக எம் எல் ஏக்கள் கலந்து கொண்டு பேசினார்கள்,

மாநாட்டில் மாநிலங்களுக்கு கூடுதல் அதிகாரம் வழங்கும் கோரிக்கை தீர்மானத்தை மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு தலைவர் பி ராமமூர்த்தி முன்மொழிந்து பேசினார். அதன் பிறகு அந்த தீர் மானம் நிறைவேற்றப் பட்டது.

மாநாட்டில் நிறைவேற் றப்பட்ட தீர்மானம் விவ ரம் வருமாறு:-

நாடு விடுதலைப் பெறுவ தற்கு முன்பு 1935-ஆம் ஆண்டில் இந்தியாவிற்கு ஒரு அரசியல் சட் டத்தை இங்கிலாந்து நாடு உருவாக்கி தந்தது. ஆனால் இந்தியா விடுதலை பெறுவதற்காக நமது தலை வர்கள் இந்த சட்டத்தை ஏற்க மறுத்து விட்டனர்.

இந்தியா விடுதலை அடைந்த பிறகு ஏற் கனவே முன்பு ஒதுக்கித் தள்ளிய அரசியல் சட் டத்தை பின்பற்றித்தான் இப்போதுள்ள அரசியல் சட்டம் உருவாக்கப்பட் டுள்ளது.

### கையேந்தும் நிலை தேவையா?

இப்போதுள்ள அரசி யல் சட்டப்படி அதிகாரங் கள் அனைத்தும் மத்திய அரசிடம் குவிந்து கிடக் கிறது மேலும் நிதி திரட் டும் அதிகாரம் இல்லாத காரணத்தால் மத்திய அரசிடம் மாநில அரசு கையேந்தி நிற்கும் நிலை ஏற்பட்டுள்ளது.

இதனால் கடந்த 30 வருட காலமாக மத்திய அரசுக்கும் மாநில அர சுக்கும் இடையே உறவு இல்லாமல் போய்விட்டது இதனால் பிரிவினை சக்தி களும் வளர ஆரம்பித்து விட்டன.

அடுத்து ஒரு மாநிலத் தில் கிடைக்கும் வேலை அந்த மாநிலத்தைசார்ந்த வருக்கே கிடைக்க வேண் டும் என்ற பிரச்சினையும் எழும்பியுள்ளது.

இந்த நிலையை பயன் படுத்திக்கொண்டு ஏகாதி பத்தியவாதிகள் நாட்டின் ஒருமையையும், ஒருமைப்பாட்டையும் சீர்குலைத்து வருகிறார்கள்.

### கூடுதல் அதிகாரம்

ஆகவே அரசியல் சட் டத்தை திருத்தி மாநிலங் களுக்கு கூடுதல் அதிகாரம் வழங்க வழி வகை செய்யவேண்டும்.

மேலும பல மொழிகள் பேசும் மக்களைக் கொண்ட மாநிலங்களுக்கு இடையே 'சம அந்தஸ்து' இருக்கிறது என்ற எண் ணத்தை ஏற்படுத்த அரசி யல் சட்டம் திருத்தப்படவேண்டும்.

இவ்வாறு மாநாட்டின் தீர்மானத்தில் கூறப் பட்டுள்ளது,

அன்று மாலை மதுரை தமுக்கம் திடலில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் மாநாட்டில்நிறைவேற்றப் பட்ட தீர்மானத்தைப் பற்றி அனைத்துக் கட்சித் தலைவர்களும் விளக்கிப் பேசினார்கள்.

---

போக்குவரத்து க்கழக தொழிலாளர்களின்

## ஊதிய உயர்வு பேச்சு வார்த்தை

சென்னை, ஆக 18-
பல்லவன்போக்குவரத்துக் கழக தொழிலாளர்களின் ஊதிய உயர்வு சம்பந்த மான பேச்சுவார்த்தை 16-8-80 பகல் 11-30 மணிக்கு சென்னையில் பல்லவன் போக்கு வரத்துக் கழக அலுவல கத்தில் நடைபெற்றது

நிர்வாகத்தின் சார்பில் நிர்வாக இயக்குனர் கோபாலகிருஷ்ணன் மற் றும் அதிகாரிகளும, அண்ணா தொழிற் சங்கப்பேர வையின் சார்பில் பேரவை பொதுச் செயலாளர் வை பெருமாள், பல்லவன் போக்குவரத்துக் கழக அண்ணா தொழிற்சங்கத் தின் சார்பில் கே பி தூயமணி, கே இராசேந் திரன ஆ நடராசன், லட்சுமணன் (மாவட்டப் பிரிவு) செல்வராசு, புண்ணிய கோட்டி ஆகியோரா கலந்துகொண்டார்கள் தொழிலாளர்களின் கோரிக்கைகள் குறித்து பேரவையின் சார்பில் தெரிவிக்கப்பட்ட கருத்துக் களை நன்கு பரிசீலித்துவிரை வாகத் தீர்வுகாண நிர் வாகம் முயற்சிகளை எடுப்ப தாகவும், விரைவில் மீண் டும் பேசலாம் என்றும் நிர்வாகத்தின் சார்பில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது

---

பல்லவன் போக்குவரத்துக் கழக
(பெருநகர் பிரிவு)

## அண்ணா தொழிற்சங்க தோழர்களுக்கு

தலைமைக்கழகத்தில் இருந்து அனுப்பிவைக்கப் படுகிற தேர்தல் ஆணையாளர்களைக்கொண்டு பல்ல வன் போக்குவரத்துக் கழக பெருநகர் பிரிவு அண்ணா தொழிலாளர் சங்க நிர்வாகிகள் தேர்தல் 24-8-1980 ஞாயிறு காலை 10 மணிக்கு அனைத்துப் பணிமனை களிலும் ஒரே நேரத்தில் நடைபெறும் என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

**வை. பெருமாள்**

சென்னை-14.
18-8 1980

தொழிற்சங்கப் பிரிவுச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.க

---

இலங்கை வாழ் தமிழர் அனைவருக்கும் குடியுரிமை வழங்குவீர்

# தமிழர்களை தூதுவராக நியமிக்க யு. ஆர். கிருஷ்ணன் கோரிக்கை

**புதுடெல்லி, ஆக. 18- தமிழர்கள் அதிகமாக வாழும் நாடுகளில் தமிழர் களையே இந்தியத் தூதுவராக நியமிக்க வேண்டும் இலங்கையில் அனைவருக்கும் குடியுரிமை வழங்க வேண்டும் என்று கழக உறுப்பினர் யூ ஆர் கிருஷ்ணன் நாடாளுமன்ற மேலவையில் கூறினார்.**

அண்ணாத்தொழிற்சங்கத் தலைவர் யு ஆர் கிருஷ்ணன் நாடாளுமன்ற மேலவை யல் பேசும் போது கூறிய தாவது:

இலங்கையில் சுமார் 5 லட்சம் தமிழ்மக்கள் வாழ் கிறார்கள் அவர்களில் பலர் குடியுரிமைஅற்றவர்களாக இருக்கிறார்கள் அனைவருக் கும் குடியுரிமை வழங்க ஏற்பாடு செய்யவேண்டும். உலகில் எங்கு அதிகமாக தமிழர்கள் வசிக்கிறார் களோ அந்த நாடுகளில் தமிழர்களை இந்திய தூது வராக நியமிக்கவேண்டும்.

### பாகுபாடு ஏன்?

எவ்வளவு தமிழ் தூத வர்கள் இருக்கிறார்கள் என்று அறிய ஆசைப்படு கிறேன். ஏன் இந்த பாகு பாடு? இந்த தூதர்களை நியமிக்கும் நியமன பத்தி ரங்களில் இந்தி அதிகமாக இடம் பெற்றிருக்கிறது. இலங்கை போன்ற நாடு கள் தமிழை ஆட்சிமொழி யாக கொண்டிருக்கின் றன.

அங்கு இந்திய தூதுவர் களாக தமிழர்களை நியமிக்க வேண்டும்.

தமிழக முதல்வர் 1981 ஆம் ஆண்டு தமிழகத்தில் உலகத தமிழ் மாநாட்டை நடத்த இருக்கிறார். உலகத்தின் பல பாகங் களில் இருந்து பல அறி ஞர்கள் கலந்து கொள்ள இருக்கின்றனர், இந்த மாநாட்டின் மூலம் உல கத்தில் இந்தியாவின பெருமை மேலும் அதிக மாக உயரும்.

### உலகத் தமிழ் மாநாடு

தமிழகத்தில் நடை பெறும் உலகத்தமிழ் மாநாட்டைப்பற்றி அயல் நாட்டில் உள்ள நம் தூதர்கள் நல்லமுறையில் விளம்பரம் செய்யவேண் டும் என்று கேட்டுக்கொள் கிறேன். அமெரிக்கா ஐக்கியநாடுகள் சபையில் இந்தியாவின் சார்பில் தமிழில் பேசுவதற்கு ஒரு வாய்ப்பை ஏற்படுத்தித் தரவேண்டும்-

தமிழக கைத்தறித்துணி க்கு உலகில் நல்ல மார்க் கெட் இருந்தது. ஆனால் இப்போது குறைந்து கொண்டே வருகிறது. இதை உடனடியாக சரி செய்யவேண்டும். உலகின் பல பகுதிகளில் நடை பெறும் கண்காட்சிகளில் நம்நாடு பங்குபெறசெய்ய வேண்டும். அதன் மூலம் நம் நாட்டில் உற்பத்தி செய்யும் பொருள்களுக்கு மார்க்கெட் பிடிக்க வேண் டும், தமிழகத்தில் இரண்டு மாதங்களுககுள் இரண்டு தைவான மீன பிடிக்கும் கப்பல்கள் கைப்பற்றப் பட்டுள்ளன. இப்படி அந்நிய மீன்பிடி கப்பல்கள் நம் எல்லைக்குள் நுழைவது நம்நாட்டின் பாதுகாப் புக்கு ஆபத்தை விளைவிக் கும். இதை உடனடியாக தடுக்கப்பட வேண்டும்,

இவ்வாறு யு. ஆர். கிருஷ் ணன எம். பி. கூறினார்.

## சந்தா விவரம்

| | | | |
|---|---|---|---|
| 1 | வருடச சந்தா தொகை | ரூ. | 130 |
| 6 | மாதச் சந்தா தொகை | ரூ. | 65 |
| 3 | மாதச் சந்தா தொகை | ரூ. | 32-50 |

3 மாதத்திற்குக் குறைவான சந்தாத் தொகை ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது

நிர்வாகி :

"அண்ணா"

275" அவ்வை சண்முகம் சாலை, சென்னை-600 014.


# அண்ணா



# ஆறு மாதத்தில் தமிழக அரசியல் நிலை மாறும்

## புரட்சித்தலைவர் கணிப்பு

**திருவண்ணாமலை, ஆக 18-இன்னும் ஐந்தாறு மாத காலத்தில் தமிழக அரசியல் நிலையில் மாற்றம் ஏற்படும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினர்.**

திருவண்ணாமலையில் கழகப் பொதுச் செயலாளர் ப.உ.ச இல்லத் திருமணத்திற்கு முதல்வர் புரட்சித்தலைவர் தலைமை வகித்துநடத்திவைத்தார்.

கழகப் பொதுச் செயலாளர் ப.உ.சவின் மாமா பழனி முதலியாரின் பேத்தியும் ப. சத்தியின் மகளுமான மகாலட்சுமிக்கும், தங்கவேல் பிள்ளையின் மகன் ரகுராமனுக்கும் முதல்வர் புரட்சித்தலைவர் திருமணத்தை நடத்தி வைத்தார்.

முதல்வர் பொறுப்பேற்றப்பின் முதன்முறையாக திருவண்ணாமலை நகரத்திற்கு வருகை தரும் புரட்சித் தலைவரை வரவேற்கும் வகையில் அண்ணாசாலையின்இருமருங்கிலும் அருகருகே வாழை மரங்களை கட்டி வைத்து ஏராளமான அலங்கார வளைவுகளை அமைத்து பேரறிஞர் அண்ணாவின் உருவம் பொறித்த கழகக்கொடிகளை தோரணமாக கட்டியிருந்தனர்

திருமணவிழா நடைபெற்ற டேனிஷ்மிஷன் மேல் நிலைப்பள்ளியில் பல்லாயிரக்கணக்கான கழகத்தோழர்கள் கூடியிருந்தனர்.

மணவிழாவிற்கு முதல்வர் புரட்சித்தலைவர் தலைமை வகித்தார். பொதுச் செயலாளர் ப.உ.ச. அனைவரையும் வரவேற்றார் தலைமைக் கழகச் செயலாளர்களும் சட்டமன்ற பேரவை மேலவை உறுப்பினர்களும் கலந்து கொண்டனர்.

மணவிழாவில் முதல்வர் புரட்சித்தலைவரின் துணைவியார் ஜானகிஅம்மையாரும் அமைச்சர் ராகவானந்தமும் கலந்து கொண்டு மணமக்களை வாழ்த்தினர்.

### முதல்வர் பேச்சு

மணவிழாவை நடத்தி வைத்து முதல்வர் புரட்சித்தலைவர் பேசும்போது கூறியதாவது:-

நான் கவனிக்கிறேனா இல்லையா என்று பார்க்க தூரத்திலிருந்து இரண்டு விரல்களை காட்டியும் கையை அசைத்தும் காட்டுகிறீர்கள், நிகழ்ச்சி முடிந்தபின் உங்களை சந்திக்கிறேன்.

ப.உ.ச.வும் நானும் எதிர் எதிர் கட்சிகளில் இருந்தபோது- ப உ ச திமுகவில் இருந்தபோது- இங்கே ஒரு கூட்டத்தில் பேசும்போது என்ன பேசினேன் என்பதை எண்ணிப் பார்க்கிறேன்பஉச யாரை நம்பி போட்டியிடுகிறார். என்று அவர் சிந்திக்க வேண்டும். யாரை காப்பாற்ற நினைக்கிறார் என்று அப்போது சொன்னேன். இதைச் சொல்ல எனக்கு உரிமை இருக்கிறது என்றும் சொன்னேன்.

இன்று அவர் பொதுச் செயலாளராக இருப்பது எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது.

நான் இங்கு வந்தால் அவரது வீட்டில் உணவருந்தி இருந்துஅவருடன் அரசியலை விவாதிப்பேன். அப்படிப்பட்டவர் எதிர்க் கட்சியில் இருந்தபோது எவ்வளவு வேதனைப்பட்டிருப்போம் ?

இன்று அவர் நம்மோடு இருக்கிறார். அவர் கழகத்திற்குதலைமை வகித்துக்கொண்டிருக்கிறார்.

### இரண்டு கோடி மகிழ்ச்சி

சுயமரியாதை என்று சொல்லப்பட்ட காலத்திலிருந்து நீதிக்கட்சி துவங்கப்பட்டு அது திராவிடர் கழகமாக மாறி, பின்னர் திமுக தோன்றியதிலிருந்து அனைத்திந்திய அண்ணா திமு கழகம் ஆட்சியைப் பிடிக்கும் வரையிலும் ப உ ச நம்மோடு இருக்கிறார். இதை இரட்டை மகிழ்ச்சி என்று சொல்லுவேன். இரண்டாயிரம் மகிழ்ச்சி, இரண்டு லட்சம் மகிழ்ச்சி, இரண்டுகோடி மகிழ்ச்சி என்றுகூட சொல்லிக் கொள்வேன்.

அச்சமுற்றிருந்த அமைச்சர் ராகவானந்தம் மீண்டும் அதே பதவியில் வந்திருப்பதில் ப.உ.ச. மகிழ்ச்சியடைந்தார்.

ஏனென்றால் 'எனக்கு வயதாகிவிட்டது நான் ஓய்வுஎடுக்கவேண்டியவன்" என்பார் அவர்.

ஆனல் அவர் ஓயாது உழைக்கும் தொழிலாளர் நல இலாகாவை வைத்துக்கொண்டிருக்கிறார்.

நாட்டிலுள்ள பிரச்சினைகளை கவனத்தில் கொண்டு பாசம் அன்பு கொண்டு செயல்படவேண்டும் என்பதைச் சொல்லிக் கொள்கிறேன் மணமக்களும் அதைக் கடைப் பிடிக்க வேண்டும்.

சிந்திக்கின்ற பக்குவத்துக்கு சொந்தக்காரராக பகுத்தறிவோடு வாழகற்றுக்கொண்டிருக்கும் வாழ்க்கை அமைய வேண்டும்.

### காக்கும் அன்னை

என்னை இன்று காப்பாற்றுவது என்னை பெற்ற தாயைத் தவிர வேறு எந்த மருத்துவமும் இல்லை, மருத்துவர்கள் உதவி செய்கிறார்கள்.

கைவண்டி இழுப்பவரானாலும் சுமை தூக்குபவர்களானாலும் உழைக்கிறார்கள் என்றால் அது அவர்களுடைய வாழ்க்கையை செம்மையாக அமைத்துக் கொள்ளத்தான் அவர்கள் யாருக்கும் பின்தங்கியவர்கள் அல்ல. அவர்கள் வீட்டிலும் இத்தகைய மணவிழாக்கள் நடக்கும்,

மணமக்கள் எவ்வளவு செல்வத்தோடு வாழ்ந்தாலும் எளிமையோடு இருக்க வேண்டும்,

நாம் வாழும் நேரத்தில் ஒவ்வொரு வினாடியும் மற்றவர்களைப்பற்றி சிந்திக்க வேண்டும்.

மனிதனுக்கு வயது கிடையாது மனது தான் காரணம்என்பதைஆணித்தரமாக அழுத்தந்திருத்தமாகச் சொல்லிக் கொள்கிறேன்

குழந்தைகளுக்கு அறுவைச் சிகிச்சை செய்ய மருத்துவர் பயப்படுவதில்லை அவரிடம்அறுவைச் சிகிச்சை செய்துகொண்ட அத்தனை குழந்தைகளும் நன்ருக வாழ்ந்து கொண்டிருக்கும்.

ஆனல் தான் பெற்ற குழந்தைகளுக்கு அறுவை சிகிச்சை செய்ய அந்த மருத்துவர் ஒப்புக் கொள்வதில்லை அந்த நேரத்தில் தன் குழந்தை என்ற எண்ணம் வரும். அதுபோல வயதுக்கு மனம் தான் காரணம்.

அன்பும், அறிவும், பண்பும் நிறைந்து இருந்தால் அங்கே பணம் இல்லை, வியாபாரம் பெருகவில்லை என்ற பிரச்சினைகள் உங்களைத் தாக்காது என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்,

பதவி வரும்போது பணிவு வரவேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். நீங்கள் அதை கடைப்பிடிக்க வேண்டும்.

உங்களை வளர்த்த பெற்ருேரை, உறவினர்களை உங்களை உயர்த்திவிட்டவர்களை நீங்கள் என்றென்றும் மறக்காமலிருக்க வேண்டும்.

எல்லோரும் நமக்கு வேண்டியவர்கள் தான். ஆனல் எங்கே, யாரை வைக்கவேண்டும் என்று பார்க்கவேண்டும். குடும்பத்தில் கலகம் விளைவிப்பவர்களுடன் தொடர்பு வைத்துக் கொள்ளக்கூடாது.

எந்த வீடு, எந்தசூழ்நிலை என்று பார்க்காமல் மணமக்கள் தன் வீடு, தன் சுற்றத்தார் தம் சொந்தம் என்றஎண்ணத்தைவளர்த்துக் கொண்டால் உங்களை யாரும் பிரிக்கமுடியாது.

ஐந்து, ஆறு மாதத்தில் தமிழக அரசியல் எப்படி இருக்கும் என்பது நீங்களெல்லாம் அறிந்தது தான்.

அண்ணா வழிவந்தவர்கள் பெரியாரின் சீர்திருத்தக் கருத்தை ஏற்றுக் கொண்டவர்களைத் தவிர வேறு யாரையும் தமிழக மக்கள் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள்.

திருமணமாக இருக்கும் எம். எல். ஏக்கள் அந்த கொள்கையை ஏற்று செயல்பட வேண்டும். ஒன்றே குலம், ஒருவனே தேவன் என்ற ஒரு வட்டத்திற்குள் இருந்து செயல்பட வேண்டும்.

இங்கிருக்கும் சட்டமன்ற உறுப்பினர்களில் சிலருக்கு திருமணம் நடக்கவேண்டும் என்று ப.உ.ச.சொன்னர். நான் அடிக்கடி வர வேண்டும் என்பதற்காக தள்ளி வைத்திருப்பதாக சொன்னர்கள்.

ஒரே மொத்தமாக ஏற்பாடு செய்யுங்கள். மாநாடுபோல நடத்தி விடலாம்.

காத்திருக்காமல் பெற்றோரின் அனுமதியுடன் குடும்பத் தலைவர் பொறுப்பை ஏற்றுக் கொண்டு நாட்டுக்கும் வீட்டுக்கும் சேவை செய்ய வேண்டும்.

குடும்பபாரம் என்று சொல்வார்கள். அது பாரமல்ல. நாம் தான் அப்படி நினைத்துக்கொண்டிருக்கிறோம்.

என் தாயின் ஆசி மணமக்களுக்கு முழுமையாக கிடைக்க வேண்டும்என்று வேண்டிக் கொள்கிறேன்.

இவ்வாறுமுதல்வர்புரட்சித் தலைவர் கூறினர்.



# தந்திரமே தந்திரம்

**ப. உ. ச.**

"தொட்ட இடமெல்லாம் சிலிர்க்குது" என்று புரட்சிக்கவிஞர் எப்போதோ, எதற்காகவோ பாடினர். ஆனல் அந்திசாயும் நேரத்தில் ஆற்றங்கரையோரத்தில் 'நீ வரமாட்டாயா' என்று நான் காத்திருந்தேனே அப்போது நீ மெல்ல வந்து என்னைத் தொட்டும் தொடாமலும் உராய்ந்தபோது... ஆகா...என் உடம்பெல்லாம் சிலிர்த்தது... அந்த மென்மை மழலை உமிழும் இதழுக்குமில்லை!

இலைகளை ஆட்டி அசைத்துவிட்டு வரும் நீ ஆற்றில் நீராடி ஈரத்தைத் துடைக்காமல் என்மீது லேசாக உன் உடல் பட்டதும்...அந்த சுகத்தை வர்ணிக்க வார்த்தை இல்லையே....

தேன் சுவையை நாக்குதான் அறியும்... இசை இன்பத்தை செவிகள் தான் உணரும்... அழகிய காட்சியை விழிகளால் தான் ரசிக்க இயலும்... நறுமணத்தை நாசியால் தெரிந்து கொள்ள இயலும்... பெற்ற குழந்தையை தடவினால்தான் உடல் சுகம் காணமுடியும்!... ஆனல் நீ என்மேல் பட்டதால் கொண்ட சுகம் என் ஐம்புலன்களும் சேர்ந்தல்லவோ அனுபவிக்கின்றன.

இப்படியே மெல்ல வந்தால் என்ன? சில நாள் சென்றால், வரும்போதே மண்ணை வாரி அடிக்கிறாயே-ஏன்? ஒருவேளை உனக்குஆடத்தெரியும் என்றுகாட்டவா நீ ஆடும் அழகைக் காணலாம் என்று கண் விரித்தால் மண்ணை வாரி அடிக்கிறாயே, நியாயமா? உன் நடனத்தை நான் பார்த்தால் கேலி செய்வேனே என்றெண்ணி இப்படிச் செய்கின்றாயா ?

சரி. நான் பார்த்து கேலிசெய்வேன் என்றெண்ணி நாணத்தால் நீ செய்யும் குறும்புத்தனத்தைப் பொறுத்துக் கொண்டு கண்களை மூடிக்கொண்டால் அழ ஆரம்பிக்கிறாயே நீ சிந்தும் கண்ணீரால் நீ மட்டுமா நனைகிறாய். என்னையும் நனையச் செய்கிறாய் கண்ணீர் சிந்தினால் இப்படியா ? நிலம் நனைந்து கரைந்து ஓடுகிறதே இது என்ன சேட்டை ?

இப்படி சேட்டை செய்யலாமா என்று நான் கேட்டதற்காகவா வேக வேகமாக சுழன்று சுழன்று ஆடுகிறாய். நீ ஆடும் வேகத்தைவிட அல்லவா உன் கண்கள் மாறி மாறி நீரை ஊற்றுகின்றன?

பயங்கரமாக நீ கூத்து ஆடிய பின் மயங்கி விட்டாய்! ஏன் இப்படி மயக்கம் வந்து அமைதியாகும்வரை ஆடுவது?

நீ ஆடிய ஆட்டத்தின் விளைவைப் பார்த்தாயா?

கோர காட்சி! இதைக் காணத்தான் இப்படி ஆடினாயா?

உன்நடையிலே...இல்லை...நடந்து வந்து உராசும் மென்மையில் மங்கையொருந்தி தரமுடியாத சுகத்தைப் பெற்றேன் என்று சொன்னதற்கா இந்த ஆட்டம்?

மென்மையில் சுகம் கண்டானேவன்மையில் அதைவிட அதிக சுகம் காண்பான் என்று தவருக எண்ணி விட்டாயோ?

நீ ஆடியது போதும் முடிந்தால் மெல்லவா! இல்லையேல்...அய்யய்யோ போய் விடாதே...நீ போனல் என் உயிரே போய்விடும்! உண்மை...இதுசத்தியம்- என்னை நம்பு...நீஇல்லையேல் நானில்லை!... கோபிக்காதே...விளையாட்டிற்காகச் சொன்னேன்.

நீ நட...ஆடு மண்ணை வாரி அடி...கண்ணீரால் என்னை மட்டுமல்ல இந்த மண்ணையே நனை சுழன்று சுழன்று ஆடு...நீ எப்படி செய்தாலும் உன்னைப்பிரிய நான் இணங்க மாட்டேன்!

ஆனல் நீ செய்யும் குரும்புத் தனத்தைத் நினைத்தால் தான் எனக்கு சிரிப்பு வருகிறது புகக் கூடாத இடத்தில் எல்லாம் புகுகின்றாய் விலக்கக் கூடாத ஆடையெல்லாம் விலக்குகின்றாய் நான் பார்க்க முடியாதவற்றையெல்லாம் எளிதாய் பார்க்கின்றாய் ஆயினும் உன்னை எவரும் கோபிப்பதில்லையே ஏன்? நீ என்றால் எல்லோருக்கும் பயமா: அல்லது பாசமா?

எங்கெங்கோ புக உன்னால் முடிகிறதே அதோ பார் மனத்தால் ஒருமித்து உடலைப் பின்னி பிணைத்திருக்கும் இளங்காதலர்கள்... அவர்களிடையே புகமுடியுமா உன்னால்?

என்ன "அது பாவம்" என்கிறாயா? உன்னால் இயலாததற்கு இதைச் சொல்லி தப்புவதா? ஏ... "காற்றே" உன் தந்திரமே தந்திரம்.

# வலியச் சென்று துன்பம் துடைத்த புரட்சித்தலைவரது அன்புள்ளம்

தாம்பரம், ஆக, 18-ஏழை எளிய பாட்டாளி மக்கள் துன்பம் வந்து கண்ணீர் வடித்தால் அந்தக்கண்ணீரைத் துடைக்க முதல்வர் புரட்சித்தலைவரது கரங்கள் விரைந்து சென்று செயல்படும்.

இது தமிழர்கள் அனைவரும் அறிந்த செய்தியாகும். புரட்சித்தலைவரது அன்புள்ளம், தாயுள்ளம், பாச உணர்வு, பரிவுள்ளம் துன்பத்தைக் கண்டால் நெகிழும் வலியச்சென்று உதவும்.

இதற்குப்பல சான்றுகள் பல சாட்சிகள் தமிழகத்தில் இருக்கிறார்கள்.

புரட்சித் தலைவரின் இரக்க உள்ளத்தைநேற்று தாம்பரம் மக்கள் கண்டனர், புரட்சித் தலைவரது பரிவுகண்டு உளம்நெகிழ்ந்தனர்.

முதல்வர் புரட்சித்தலைவர் நேற்று காலை கலைவாணர் அரங்கில் நடந்த திருமணவிழாவில் கலந்து கொண்டுவிட்டு கழகப பொதுச்செயலாளர் ப. உ. ச. இல்லத் திருமணத்தில் பங்கேற்க திருவண்ணாமலை சென்றார்.

வழியில் செங்கல்பட்டில் உள்ள மேல மங்கலம் என்ற ஊரில் ஒரு திருமணத்தில் கலந்துகொள்ளச் சென்றார்.

முதல்வர் புரட்சித்தலைவருடன் அவரது துணைவியார் ஜானகி அம்மாளும் சென்றார்.

முதல்வர் புரட்சித்தலைவர் காரில் சென்று கொண்டு இருந்த போது தாம்பரம் இரும்புலியூர் மேம்பாலம் அருகே ஒரு லாரியால் மோதப்பட்டு இரண்டு மாட்டுவண்டிகள் குடை சாய்ந்து மாடுகளும் அடிப்பட்ட நிலையில் இருந்த விபத்தை முதல்வர் பார்த்தார்.

உடனே காரை நிறுத்தி விபத்து நடந்து இருந்த இடத்திற்குசென்று பார்த்தார்.

கூடுவாஞ்சேரியில் இருந்து தாம்பரத்திற்கு சுந்தரேசன், ரத்தினம் ஆகிய இருவரும் தனித் தனியாக மாட்டுவண்டிகளில் வந்து கொண்டு இருந்தனர்.

இரும்புலியூர்மேம்பாலம் அருகே இந்த மாட்டு வண்டிகள் சென்று கொண்டிருந்தன.

அப்போது செங்கற்பட்டில் இருந்து மணல் ஏற்றி வந்த லாரி ஒன்று இந்த இரண்டு மாட்டுவண்டிகள் மீதும் பயங்கரமாக 'படார்' என்றுமோதியது.

இதனல் அந்த இரண்டு வண்டிகளும் குடை சாய்ந்து உருண்டது. மாடுகளுக்கு பலத்த காயம் ஏற்பட்டது. வண்டிகளும் சேதம் அடைந்தன.

விபத்தை உண்டாக்கிய லாரி டிரைவர் ஓடிவிட்டார்.

இந்த விபத்தைப் பார்த்த முதல்வர் புரட்சித்தலைவர் மாட்டுவண்டியில வந்த ரத்தினம், சுந்தரேசனிடம் விசாரித்தார், அவர்களும் நடந்த விபத்தை விவரித்தனர்.

இருவருக்கும் முதல்வர் புரட்சித்தலைவர் ஆறுதல் கூறி உடனேயே தக்க நடவடிக்கை எடுப்பதாக கூறினர்.

உடனேயே ஒயர்லஸ் மூலம் காவல் துறையினருக்கு விபத்து பற்றி தகவல் கொடுத்தார்.

தாம்பரம் போலீசார் அந்த இடத்திற்கு உடனே விரைந்து சென்று விசாரணை நடத்தினர்கள்.